**புது வருஷ பட்ஜெட் பற்றிய விளக்க அறிக்கை:**

1951-ம் வருஷத்தில் உலகத்தின் பெரும் பாலான நாடுகளில் போலவே இந்தியாவிலும் பொருளாதார நிலைமை கஷ்டமானதாகவே இருந்திருக்கிறது. பணவீக்கத்தையும் விலையேற்றத்தையும் தடுப்பதும், உற்பத்தியைப் பெருக்குவதும், மறுபடியும் ஒரு வருஷம் நாட்டுக்கு மழை பொய்த்துப் போய் இருக்கும் நிலைமையால் நாட்டின் பெருவாரியான உணவுப் பற்றாக்குறையைச் சமாளிப்பதுமே முக்கியப் பிரச்னைகளாக இருந்து வந்திருக்கின்றன. யுத்தத்துக்குப் பிறகு, பெரும்பாலான நாடுகளில் நிற்காத விலையேற்றமே பொருளாதாரத்தில் ஒரு அம்சமாய் இருந்து வந்திருக்கிறது. நாணயக்கு யுத்த காலத்தில் ஏற்பட்ட பணவீக்கமும், நாணயக்கு சரக்குகள், தேவைகள் இவற்றின் சப்ளைக்கும் கிராக்கிக்கும் இடையில் உள்ள பெரிய வித்தியாசமுமே இவற்றிற்குக் காரணமாகும். இந்தியாவில், தேசப்பிரிவினையும், யுத்தம் முடிந்த பிறகு இடைப்பட்ட ஒவ்வொரு வருஷமும் நாட்டின் பெரும்பாகத்தில் ஏற்பட்டு வந்துள்ள மழையின்மை, வறட்சி அல்லது வெள்ளம் போன்ற இயற்கைக் கோளாறுகளும் சேர்ந்து இந்த நிலைமையை இன்னும் மோசமாக்கிவிட்டன. மிகச் சமீபத்திலேயே கொரிய யுத்தம் காரணமாகவும், அமெரிக்காவும் மேற்கு ஐரோப்பிய நாடுகளும் பெருத்த அளவில் உற்பத்திச் சக்தியை ஆயுதத் தயாரிப்புக்குப் பயன்படுத்தின காரணமாகவும் விலையேற்றம் இன்னும் தீவிரமாய் விட்டது. பவுன் மதிப்பை குறைத்ததன் காரணமாகவும் விலையேற்றம் இன்னும் தீவிரமாய் விட்டது. பவுன் மதிப்பை குறைத்ததும் இதற்கு நாணய தூண்டுதலாய் இருந்திருக்கிறது. <u>விலைவாசிக் குறியீடு</u> 1950-ம் வருஷம் முழுவதும் விலைவாசிகள் மேலே மேலே ஏறிக் கொண்டே போயின; அந்த வருஷக் கடைசியில் மொத்த விலைக் குறியீட்டெண் 412.6 ஆகிவிட்டது. அதாவது, 31 அம்சம் உயர்ந்து விட்டது. 1951-ம் வருஷத்தின் முதல் நான்கு மாதங்களில் மேலும் துரிதமாக விலைகள் ஏறிவந்தன; ஏப்ரல் மாதத்துக்குள் 457.5 ஆகிவிட்டது. இந்த நிலையில் விலைகளின் ஏற்றம் தடுத்து நிறுத்தப்பட்டது. ஜூலை மாதம் முதல் இறங்குமுகம் தோன்றிற்று. 1952 ஜனவரிக்குள் குறியீட்டெண் 428.8 ஆக இறங்கிவிட்டது. சென்ற சில மாதங்களில் விலையேற்றத்தில் பெரும் பகுதிக்கு, இறக்குமதியாகும் சரக்குகளின் உலகளாவிய விலைவாசி உயர்ந்திருப்பதும் இந்திய சர்க்காரின் கட்டுப்பாட்டிற்கு உட்படாத சில பொருள்களின் விலை உயர்வுமே காரணமாயிருந்திருக்கின்றன. 1950-ம் வருஷம் ஜூன் மாதத்தில் இருந்த விலைவாசி நிலையோடு ஒப்பிட்டால் இந்தியாவில் ஏற்பட்ட உயர்வு 10 சதவிகிதத்திற்குச் சற்று அதிகமானதுதான். ஆனால் பிற நாடுகளில் இதைவிட எவ்வளவோ அதிகமாக விலைகள் உயர்ந்திருக்கின்றன. சில நாடுகளில் 30 சதவிகிதத்துக்கு மேலேயே ஏறியிருக்கின்றன. விலைவாசிகள் இன்னமும் 1950-ம் வருஷத்து சராசரி அளவைக் காட்டிலும் அதிகமாகவே இருந்து வந்திருக்கின்றன. என்றாலும், சென்ற சில மாதங்களாகப் படிப்படியாய் அவை இறங்கி வந்திருப்பது வரவேற்கத்தக்க விஷயமாகும். <u>பணவீக்க எதிர்ப்பு</u> பணவீக்கத்தை தடுப்பதற்கான நடவடிக்கைகளில் இரண்டு அம்சங்கள் பெரிதும் உதவியாக இருந்திருக்கின்றன. முதலாவதாக பட்ஜெட்டில் எதிர்பார்க்கப்பட்டதைக் காட்டிலும் எவ்வளவோ அதிகமாக ரெவின்யூ மிச்சம் கிடைத்தது. நாணயக் இந்த அபிவிருத்தியானது, ஏற்றுமதி வரிகளை உயர்த்தியும் விதித்தும் புதிய வரிகளை விதித்தும் வசூலித்தும் சர்க்கார் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்தியதாலேயே சாத்தியமாயிற்று. பருத்தி ஜவுளி மீதும், நிலக்கடலை மீதும் வரிகள் உயர்த்தப்பட்டன. எண்ணெய் வித்துக்கள், தாவர எண்ணெய்கள் இவற்றின் ஏற்றுமதி மீது புதிய வரிகள் விதிக்கப்பட்டன. இரண்டாவதாக அமெரிக்காவிடமிருந்து கடனாகக் கிடைத்த கோதுமையை விற்றுப் பணம் உதவிற்று. ஜனங்களின் வாங்கும் சக்தியை கணிசமாய்க் குறைத்து அந்த அளவுக்குப் பணத்தை சர்க்கார் கஜானாவுக்குத் திருப்பியதன் மூலம் இந்த இரண்டு அம்சங்களும் பணவீக்கத்தைத் தடுப்பதற்கு பெரிதும் உதவிபுரிந்திருக்கின்றன. பணவீக்கத்தைத் தடுப்பதற்காக மற்றொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்பட்டது. பாங்கி ரேட்டும் 3 சதவிகிதத்திலிருந்து 3½ சதவிகிதம் உயர்த்தப்பட்டது. கடன் அளவை கட்டுப்படுத்துவதற்காக இந்த வழி, சகஜமாக உபயோகிக்கப்படுவதுதான். ஆனாலும், சமீப காலத்தில் இது அதிகமாய் பயன்படுத்தப்படவில்லை. ஆனால், பணமார்க்கெட்டில் ஒரு மாறுதல் ஏற்படுகிறது. 1951-ம் வருஷத்தில் கடன் கொடுக்கும் அளவானது சற்று அதிகமாகவே அதிகரித்து விட்டது; மந்தமான காலத்திலேயும் கூட பாங்கு கடன் அளவு அதிகமாகவே இருந்திருக்கிறது. இந்த வட்டி உயர்வுக்குப் பிறகு பணமார்க்கெட்டில் ஏற்பட்ட நிலைமையிலிருந்து இந்த நடவடிக்கை சரியானதென்று இப்போதே தெரியவந்திருக்கிறது. <u>கடன் மார்க்கெட்</u> சென்ற வருஷத்தில் கடன் பத்திரங்களின் விலைகள் குறைந்துக் கொண்டே வந்திருக்கின்றன என்றாலும், அந்த வருஷத்தின்